14th February 1958]

தேதியிலாவது விழுப்புரம் தாலூகாவில் என்னுடைய தொகுதியை எடுத்துக் கொள்வார்களா ? நேற்றைய தினம் அங்கத்தினர்களுடைய ஒத்துழைப்பு வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஒத்துழைப்புத் தேவையானால், இதை உடனடியாக எடுத்துக் கொள்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படிப் பார்க்கப் போனால் என்னுடைய தொகுதியான பொள்ளாச்சியில் எந்தவிதமான அபிவிருத்தித் திட்டமும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. ஆகையால் நான் இதிலே ஒத்துழைக்க முடியாது என்று சொல்லமுடியுமா ? என்னுடைய தொகுதி இன்னாருடைய தொகுதியென்று இந்தப் பிரச்சனையை அணுகக்கூடாது. எதாவது ஒரு பகுதியை எடுத்துக்கொள்ளவேண்டும்.

*The Madras Prevention of Insults to National Honour Act, 1957*

* 115 *Q.*—SRI P. S. CHINNADURAI, SRI T. S. RAMASWAMY PILLAI AND SRI S. B. ADITYAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of persons arrested so far under the Prevention of Insults to National Honour Act, 1957;

(*b*) the number convicted; and

(*c*) the number sentenced to imprisonment for more than six months?

THE HON. SRI BHAKTAVATSALAM : (*a*) 2,737.

(*b*) 2,713.

(*c*) 875.

* 116 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Home be pleased to state the number of Dravida Kazhagamites who were convicted under the Prevention of Insults to National Honour Act, 1957, for burning copies of the Constitution of India?

THE HON SRI M. BHAKTAVATSALAM : 2,713.

* 125-D. *Q.*—SRI M. P. SARATHI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the total number of persons arrested and convicted under the Prevention of Insults to National Honour Act, 1957; and

(*b*) the steps taken by the Government towards the eradication of castes?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 2,737 persons were arrested, and 2,713 persons were convicted, under the Prevention of Insults to National Honour Act, 1957.

(*b*) The Government have ordered that no mention of caste or community, other than the Scheduled Castes, Scheduled Tribes and Backward Classes, should be made in official documents and records. In the matter of recruitment to the public services, there

[14th February 1958

is now no reservation of appointments for any community other than the Scheduled Castes, the Scheduled Tribes and Backward Classes.

The caste problem is mainly a social problem which cannot be solved by statute alone. The Government hope that the problem will disappear gradually with the increasing spread of education and the establishment of a socialistic pattern of society.

**Sri M. P. SARATHI** : இம்மாதிரித் தொந்தரவுகள் ஏற்படாமல் இருக்க ஜாதிப் பெயரைப் போட்ட போர்டுகளை போடக்கூடாது என்று சர்க்கார் சட்டம் இயற்றுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : போர்டு போடுவது வேறு விஷயம். போர்டில் ஜாதிப் பெயர் போடுவது பற்றி இங்கே அபிப்பிராய பேதம் தெரிவிக்கப்பட்டது.

**Sri P. S. CHINNADURAI** : கைது செய்யப்பட்டவர்களின் மொத்த எண்ணிக்கைக்கும், ஆறு மாதத்திற்கு மேலே தண்டிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கைக்கும் வித்தியாசம் காணப்படுகிறது. அதாவது ஆறு மாதத்திற்கு மேல் தண்டனை விதிக்கப்பட்டவர்களின் தொகை குறைவாகவும், மொத்தம் தண்டிக்கப்பட்டவர்களின் தொகை அதிகமாகவும் காணப்படுகிறது. தண்டனைக் காலம் மூன்று வருடம் என்று சட்டத்தில் சொல்லியிருக்கிறது. தண்டனை கொடுப்பது சம்பந்தமாக சர்க்கார் ஏதாவது நடவடிக்கை காட்டுகிற கொள்கையை அனுஷ்டிக்கிறார்களா என்று அறிய விரும்புகிறேன் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு இவ்வளவுகூட அனுபவம் இல்லை என்று தோன்றுகிறது. இந்த சட்டசபை சட்டத்தைத்தான் இயற்றுகிறது. சட்டத்தின் பெயரால் அரசாங்கம் நடவடிக்கை எடுக்கிறது. நீதிபதி தண்டனை கொடுக்கிறார். நீதியும் நிர்வாகமும் பிரிக்கப்பட்டிருக்கிறது. நீதி செலுத்துகின்றவர்களுக்கும் அரசாங்கத்திற்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. சட்டத்தில் அதிகபட்ச தண்டனை குறிப்பிடப்பட்டிருக்கிறது. குறைவான தண்டனை கொடுப்பதோ, அதிகமாகக் கொடுப்பதோ நீதிபதியின் அபிப்பிராயத்தைப் பொறுத்ததாக இருக்கிறது.

**Sri T. S. RAMASWAMY PILLAI** : அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது, பட்டியல் ஜாதியினரையும், பிற்பட்ட வகுப்பினரையும் மட்டுமே சர்க்கார் தஸ்தாவேஜுகளில் குறிப்பிடவேண்டுமே தவிர, வேறு இதர ஜாதியினரைக் குறிப்பிடக்கூடாது என்று கூறுகிறார்கள். அத்தாட்சிப் பத்திரங்களில்கூட அவர்களுடைய ஜாதியின் பெயரை அதாவது " பறையன், புலையன் " என்று கூறப்படுவதை நீக்கியிருக்கிறார்களா என்று கேட்கிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : கனம் அங்கத்தினர்கள் ஒரு வாதத்தைச் சொன்னார்கள், அதை நான் ஏற்றுக்கொள்கிறேன். பட்டியல் ஜாதியில் யார் சேர்ந்தவர்கள், யார் சேராதவர்கள் என்ற பிரச்னை அப்போதைக்கப்போது பரிசீலிக்கப்பட்டு வருகிறது. சிலசமயம் தவறுதலாக பட்டியல் ஜாதியில் சேர்க்கப்படுகிறது என்றும் சொல்லப்படுகிறது. ஆகவே, ஸெர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கும்போது, எந்த வகுப்பைச் சேர்ந்தவர் என்று போட்டுவிட்டால், பட்டியல் ஜாதியைச் சேர்ந்தவர்களா இல்லையா என்று தெரிந்துகொள்ளலாம்.

**Sri A. GOVINDASAMY** : திராவிட கழகத்தினர் அரசியல் சட்டத்தைக் கொளுத்தினதாகவா, அல்லது நகலைக் கொளுத்தினதாகவா சர்க்காருக்கு தகவல் கிடைத்தது ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : கனம் அங்கத்தினர் நீண்ட அனுபவம் பெற்றவர். சட்டம் என்பது ஒன்று. சட்டத்தின் நகல் என்றால் எனக்குப் புரியவில்லை. அசல் சட்டம் எங்கே இருக்கிறது. அசல் சட்டம் சட்டசபையில் இருக்கிறதா என்று கேட்கிறேன் ?

14th February 1958]

SRI A. A. RASHEED : What is the amount of fine collected from the prisoners ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am sorry, I do not have any information just now.

SRI S. B. ADITYAN : ஆறு மாதத்திற்கு மேலாக 875 பேர்களைத் தண்டித்து இருப்பதாகச் சொன்னார்கள். ஆறு மாதத்திற்கு மேலாக இருந்தால் அதிகபட்சமான தண்டனை எவ்வளவு கொடுக்கப்பட்டது ? இரண்டு ஆண்டு தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது அல்லவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கொடுக்கப்பட்டிருக்கிறது என்றுதான் நினைக்கிறேன். என்னென்ன தண்டனை கொடுக்கப்பட்டது என்பதைப் பற்றி என்னிடம் தகவல் இல்லை.

SRI K. ANBAZHAGAN: அரசியல் போராட்டங்களில் ஈடுபட்டவர்களிலே, பலர் கைது செய்யப்பட்டும் தண்டிக்கப்படவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டதால், அவர்களைச் சிறையில் வைத்திருப்பது அரசாங்கத்திற்கு வீண் செலவாதலாலும், அரசியல் போராட்டங்களில் ஈடுபட்டவர்களை அடிக்கடி விடுதலை செய்வதுதான் ஜனநாயகப் பண்பாதலாலும், அவர்களை விடுவிக்க அரசாங்கத்தினிடம் ஏதாவது திட்டமிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசியல் பெயரைச் சொன்னாலும் குற்றம் குற்றமே. அந்தக் குற்றத்திற்குத் தண்டனை கொடுக்க வேண்டிய ஏற்பாட்டைதான் செய்யவேண்டும். விடுதலை செய்யப்படுவது என்பது, நேற்று கனம் நிதி அமைச்சர் அவர்கள் சொன்னதுபோல் அந்தந்த சந்தர்ப்பத்தைப் பொறுத்தது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த அரசியல் சட்டத்தை எரித்தவர்களுக்கு அரசாங்கம் கடுமையான தண்டனை அதாவது என் தூக்கு தண்டனை கொடுக்கக்கூடாது என்று கேட்க விரும்புகிறேன் ? 9-10 a.m.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கேள்வி நேரத்திலே அதை கேட்கக்கூடாது. கோர்ட்டிலே அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளுகிறார்கள்.

*Medium of instruction in colleges*

* 117 *Q.*—SRI A. VEDARATHNAM AND SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether there is any proposal to introduce Tamil as the medium of instruction in colleges; and

(*b*) if so, when and in which colleges?

THE HON. SRI C. SUBARAMANIAM : (*a*) & (*b*) The question is under consideration.

* 118 *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have taken any decision in regard to the medium of instruction in colleges; and

(*b*) the steps taken to implement it?

THE HON. SRI C. SUBRAMANIAM : The same answer as given to Question No. 117 applies to this question also.